REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

**நல்லறிவு**

நாட்டிலே நல்லறிவு பரவினால்தான் அடிப்படை பலமாக இருக்கும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர் : எம். ஜி. ஆர்




மலர்: 4 சென்னை 28-7-1980 திங்கள் (★) ❋ ● ❋ (✱) வெளியூர் 29-7-1980 செவ்வாய் இதழ் 260

# காவிரி நீர் பிரச்சினை: முதல்வர்களுடன் மேலும் பேச கழக அரசு முடிவு

**சென்னை, ஜூலை 28-காவிரி நீர் பிரச்சினையில் நியாயமான முறையில் தீர்வு காணும்பொருட்டு முதலமைச்சர்களிடையே மேலும் ஒரு முறை பேச்சுவார்த்தை நடத்துவதற்காக நடவடிக்கை எடுப்பதற்கு மத்திய அரசை அணுக, கழக அரசு முடிவு செய்துள்ளது.**

பாசனம் மீதான மானியக் கோரிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளதாவது:-

பெரிய நடுத்தரப் பாசனத் திட்டங்களுக்கு 1980-81ல் 24.38 கோடி ரூபாய் ஒதுக்கப்படும்.

## உலக வங்கி உதவி

உலகவங்கியின் உதவியுடன் 41.04 கோடி செலவில் நிறைவேற்றப்படும். பெரியாறு-வைகை நவீனப்படுத்தும் திட்டம் முன்னேற்றத்தில் உள்ளது 79-80-ல் இத்திட்டத்திற்கு 6.86 கோடி ரூபாய் செலவிடப்பட்டது. 80-81-ல் இத்திட்டத்திற்காக 9.30 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

தர்மபுரி மாவட்டத்தில் 8 நடுத்தர பாசனத் திட்டங்கள் முன்னேற்றத்தில் உள்ளது மதுரை மாவட்டத்தில் பி.டி. ராஜன் வாய்க்காலிலிருந்துவரப்பு கால்வாய் 44.12 லட்ச ரூபாய் செலவில் அமைக்க ஒப்புதல் அளிக்கப்பட்டுள்ளது.

வைகை நதியில் வரும் உபரி நீரை வைகையிலிருந்து கிருதுமால் மற்றும் குண்டார் நதிப் படுகைகளுக்கு திருப்பிவிடுவதற்கு அரசு ஒப்புதல் அளித்துள்ளது

இத்திட்டத்திற்கு 95 லட்சரூபாய் செலவாகும் என மதிப்பிடப்பட்டுள்ளது

உப்பார் நீர்த்தேக்கத் திட்டம், சித்தமல்லி நீர்தேக்கத்திட்டம், நொய்யல் அணைத் திட்டம் சூலகிரி-சின்னார் திட்டம், ஆனந்தார் வாய்க்கால்கள் நவீனப்படுத்தும் திட்டம் ஆகிய திட்டங்களுக்கு 1980-81ல் ஒப்புதல் அளிக்கப்படலாம்.

இதனால் 18 ஆயிரத்து 783 ஏக்கர் நிலங்கள் பயன்பெறும்.

பரம்பிக்குளம் - ஆளியாறு திட்டத்தில் அடங்கிய ஆயக்கட்டு விரிவாக்கும் திட்டத்தின் ஒரு பகுதி வேலைகள் முடிக்கப்பட்டு. 30 ஆயிரத்து 40 ஏக்கர் புதிய நிலங்கள் பயன் பெறும்படி பாசன வசதியை உருவாக்க திட்டமிடப்பட்டுள்ளது.

80-81ல் பொதுப்பணித் துறை கீழுள்ள நீர்நிலைகளைச் சீர்படுத்த 75 லட்ச ரூபாயும் ஊராட்சி ஒன்றியத்தின் கீழ் உள்ள நீர்நிலைகளை சீர்படுத்த 50 லட்ச ரூபாயும், முன்னாள் ஜமீன் நீர்நிலைகள் சீர்படுத்த 10 லட்ச ரூபாயும் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

## சென்னைக்கு கிருஷ்ணாநீர்

சென்னை மாநகருக்கு குடிதண்ணீர் வழங்குவதை அதிகரிக்க ஸ்ரீசைலம் நீர்த்தேக்கத்தில் இருந்து தமிழ்நாட்டிற்கு 15 டி.எம்.சி. கிருஷ்ணாநீரை கொண்டு வருவதற்கான ஆய்வுகள் முன்னேற்றத்தில் உள்ளன.

81ம் ஆண்டின் நடுவில் ஆந்திரப்பிரதேச எல்லைக்குள் நடக்கும் ஆய்வுப்பணிகள் முடிவுறும் என எதிர் பார்க்கப்படுகிறது.

தமிழ்நாட்டில் நடைபெறும் ஆய்வு வேலைகள் முடிவுறும் நிலையில் உள்ளன.

காவிரி நீரை பயன்படுத்தும் மாநிலங்களுக்கிடையே அதனைப் பங்கிட்டுக் கொள்ளும் பிரச்சினை குறித்து மத்தியஅரசு தலையிட்டு நியாயமான முடிவு எடுக்க 1979ம் ஆண்டில் மேற்கொண்டு ஒரு முயற்சி செய்யப்பட்டது. தமிழ்நாட்டின் நீர்ப்பாசனமேம்பாட்டை பாதிக்கும் எந்த விதமான ஒரு ஒப்பந்தத்திற்கோ அல்லது ஒரு ஏற்பாட்டிற்கோ தமிழ்நாடு உடந்தையாக இருக்காது என்ற தனது முந்தைய கருத்தை மாநில அரசு வலியுறுத்தியது. நியாயமான முறையில் இந்த பிரச்சனைக்கு தீர்வு காணும் பொருட்டு முதலமைச்சர்களிடையே மேலும் ஒரு முறை பேச்சுவார்த்தை நடத்துவதற்காக நடவடிக்கை எடுப்பதற்கு மத்திய அரசை அணுக உத்தேசிக்கப்பட்டுள்ளது.

கோதையாறு திட்டம், மணிமுத்தாறு பெரிய கால்வாய், கீழ்பொன்னியாறு திட்டம், தாம்பிரபரணித் திட்டம் ஆகியவைகளை நவீனப்படுத்துவதற்கான ஆரம்ப ஆய்வுப்பணிகள் ஏற்கனவே மேற்கொள்ளப்பட்டுவிட்டன.

## பெரியாறு அணை

கேரள எல்லைக்குள் உள்ள தமிழகத்திற்குச் சொந்தமான பெரியாறு அணை சுமார் 100 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது ஆகும் பெரியாறு அணையின் நிலைமைபற்றி மத்திய நீர்வளக் குழுவும் இந்த அரசும் கவனம் செலுத்தி வந்தன. மத்திய நீர்வளக் குழுவின் தலைவரின் ஆலோசனையைப் பெற அவ்வணையை மேற்பார்வையிட அரசு அவரை அழைத்தது. அணையைப் பார்வையிட்ட பின், தலைவர், மத்திய நீர்வளக்குழு மற்றும் கேரள, தமிழக அதிகாரிகளுக்கிடையே நடைபெற்றக் கூட்டத்தில் அணையை பலப்படுத்துவதற்கான நடவடிக்கைகள்பற்றி முடிவெடுக்கப்பட்டது இம்முடிவின்படி அணையைப் பலப்படுத்துவதற்கான திட்ட வேலைகளை அங்கீகரிக்க அரசு தக்க நடவடிக்கை எடுத்துள்ளது

நீண்ட காலத்திட்டமாக ஏற்கனவே இருக்கும் அணையின் கீழ் பகுதியில் மற்றொரு புதிய அணை கட்டுவதற்கான சாதயக் கூறுகள் ஆராயப்பட்டு வருகின்றன,

மேற்கு நோக்கிப்பாயும் நதிகளின் உபரித் தண்ணீரை கிழக்கு நோக்கி தமிழ்நாட்டில் வறட்சி பகுதிகள் பயனடையும் வகையில் திருப்பிவிடுவது பற்றி ஆராய்ந்து அதற்கான திட்டங்களை சமர்ப்பிக்கும் பொருட்டு மத்திய அரசால் அமைக்கப்பட்ட வல்லுநர் குழு பேச்சுவார்த்தைகள் நடத்தி வருகின்றது

கேரள மாநிலத்தில் மேற்கு நோக்கிப்பாயும் நதிகள் உட்பட நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஓடும் நதிகளின் உபரித் தண்ணீரை நதிகளின் படுகைக்கு இடையே திருப்பி விடுவதற்கான கருத்துரு பற்றி பரிசீலனைசெய்ய மாநில அதிகாரிகளுக்கிடையேயான கூட்டம் ஒன்றை மத்திய அரசு சமீபத்தில் கூட்டியது.

இவ்வாறு மானியக் கோரிக்கையில்தெரிவிக்கப்பட்டுள்ளது.

## முதல்வர்கள்மாநாட்டில் புரட்சித்தலைவர்

**புதுடெல்லி, ஜூலை 28 மாநில முதலமைச்சர்கள் மாநாட்டில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் கலந்து கொண்டார்,**

புதுடெல்லியில் நேற்று நடந்த முதலமைச்சர்கள் மாநாட்டில் நெல்லுக்கு கொள்முதல் விலை நிர்ணயம் செய்வது குறித்து விவசாய விளை பொருட்கள் விலைநிர்ணயக் கமிஷன் தெரிவித்துள்ள விலை குறித்து ஆலோசனை நடந்தது.

மத்திய விவசாயதுறை அமைச்சர் ராவ் வீரேந்திரசிங் தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் தமிழகம் உட்பட பல்வேறு மாநிலங்களும் நெல் கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு 130 ரூபாய் ஆக உயர்த்த வேண்டும் என வலியுறுத்தின.

இன்று தொடர்ந்து யோஜனா பவனில் மாநில முதலமைச்சர்கள் மாநாடு நடந்தது.

மாநிலங்களுக்கான திட்ட முதலீடு உட்பட பல்வேறு விஷயங்கள் குறித்து இன்று ஆலோசனை நடந்தது.

இன்றையக் கூட்டத்தில் தமிழக முதலவர் புரட்சித் தலைவரும் மற்றும் தமிழகத்தில் இருந்து சென்ற அமைச்சர்களும் பங்கேற்றனர்.

கோவைத்தம்பி பேச்சு

## கால் நடைக்கு சித்த வைத்திய மருத்துவ முறை பயன்படுத்துக

**சென்னை, ஜூலை. 28- கால்நடை மருத்துவத்திற்கு சித்த வைத்திய முறையைப் பயன்படுத்த முயற்சி செய்யவேண்டும் என்று சட்டப்பேரவையில் கோவைத்தம்பி கூறினர்.**

கால்நடை மருத்துவ மானியக் கோரிக்கை மீது சட்டப்பேரவையில் கோவைத் தம்பி பேசும் போது கூறியதாவது:

கால்நடை ஆய்வாளர்களுக்கும் துணை சர்ஜன்களுக்கும் உள்ள வேறுபாடுகளை சில உறுப்பினர்கள் கருத்து மாறுபாடோடு எடுத்து வைத்தார்கள்.

டாக்டர்கள் கம்பவுண்டர்களாகவும் கம்பவுண்டர்கள் டாக்டர்கள் ஆகவும் செய்யும் முயற்சி போல் தோன்றுகிறது அரசு இதற்கு உச்சமட்டகுழு அமைத்து பரிசிலனை செய்ய உள்ளது என்பது வரவேற்கத்தக்கதாகும் அரசு நிர்வாகயந்திரத்தில் அங்கம் வகிக்கின்ற அனைத்து அதிகாரிகளும் ஜனநாயகமுறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அரசுக்கு ஏற்றவாறு தங்களுடைய மனப்பக்குவத்தை மாற்றிக்கொள்ள வேண்டும்

மக்களால் தேர்ந்து எடுக்கப்படுகின்ற ஒரு அரசு அமைச்சர்கள் மூலம் கோப்புகள் வாயிலாக உத்தரவிடும்போது அந்த கோப்புக்களை வெறும் ஜடப்பொருளாகக் கருதி விட்டுவிடக் கூடாது. வெறும் காகிதத்தில் மையால் எழுதப்பட்டவைகள் கரும்புள்ளிகள் என்று கருதாமல் கோப்புகள் உயிரோட்டம் உள்ள ஒரு ஜீவன் என்று கருதி ஆவன செய்யவேண்டும்.

## அண்ணா கூறியது என்ன?

1967ல் அமரர் அண்ணா முதல்வர் பொறுப்பு ஏற்றவுடன் சைதையில் ஒரு கால்நடை மருந்தகத்தை திறந்து வைத்து உரையாற்றும்போது, இன்றைய பொருளாதார நிலையில் இவ்வளவு உயர்ந்த விலை கொடுத்து கால்நடைகளுக்கு நவீன மருந்துகள் வாங்க முடியாது. ஆகவே சிக்கனமாக மூலிகைகள் மூலமாக சித்தவைத்தியமுறை மூலம் சிகிச்சை அளிக்கலாம் என்று கூறினர், அதை உத்தரவு மூலமாக சுற்றறிக்கையாக அனுப்பினர்.

## நவீன மருந்து

அதை யாரும் கடைப்பிடிக்கவில்லை உதாரணத்திற்கு வயிற்றுப் பொருமல் உள்ள ஒரு கால்நடைக்கு சித்த வைத்திய மூலமாக சிகிச்சை அளிக்கவேண்டும் என்றல் மிளகும், சுக்கும் 50 பைசாவுக்கு வாங்கினல் போதும் ஆனல் நவீன மருந்து என்ற அடிப்படையில் இதுவே "பல்கிஸ்ஜிஞ்சர்" என்ற பெயரில் பத்து ரூபாய்க்குவிற்கப்படுகிறது சிக்கன முறைக்கு கால்நடையில் சித்த வைத்தியத்தை நாம் புகுத்த வேண்டும்.

வேலை நிறுத்தம் என்ற பெயரால் அரசு நிர்வாக யந்திரத்தை முடக்கி சேதபடுத்தியவர்கள் மீது கடுமையான நடவடிக்கையை தமிழக அரசு எடுக்க வேண்டும்.

மறுவாழ்வு திட்டத்தில் கைம்பெண்கள் உடல்ஊனமுற்றோர்; அனாதைகள் இவர்களுக்கும் வகமாக புனர்வாழ்வு அளிக்க வேண்டும்; சத்துணவு திட்டத்தை விரிவுபடுத்தி வேகப்படுத்த வேண்டும்.

இவ்வாறு கோவைதம்பி பேசினர்.

ராஜேந்திரன் பேச்சு

## புரட்சித்தலைவர் ஆட்சியை அசைக்க முடியாது

சென்னை 37வது வட்டம் அயனாவரத்தில் நடைபெற்ற கழகப் பொதுக் கூட்டத்தில் அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் ஐசரிவேலன், வலம்புரி ஜான், ஜே.சி.டி. பிரபாகரன் எம்.எல்.ஏ, தரங்கை கண்ணன், மா.சு. எத்திராசன், இளஞ்செழியன், ரவீந்திரன், தமிழ்மணி, ஆகியோர் பேசினர் கூட்டத்திற்கு அருணை தலைமைவகித்தார்

அமைச்சர் ராஜேந்திரன் பேசும்போதுகூறியதாவது:

நடந்து முடிந்த பாராளுமன்ற தேர்தலுக்கு பின கடந்த மூன்று மாதங்களில் கழகத்தோழர்கள் பட்ட அல்லல்களும் தொல்லைகளும் எதிர் கட்சியினர் ஆடிய ஆட்டத்தினையும் மறக்க முடியாது

இந்திரா சொன்னால் போதும் கருணாநிதிதான் முதலமைச்சர் என்று எக்காளமிட்டவர்களையும் நாடு அறியும் தமிழக வாக்காளப் பெருமக்கள் நிலைமையை நன்குப் புரிந்துகொண்டவர்கள்

பண்புள்ளமும் இளகிய நெஞ்சமும் கொண்டபுரட்சித்தலைவரைத்தான் இந்நாட்டின் முதல்வராக்குவோமென்று முடிவெடுத்து தமிழக மக்கள் ஒன்று சேர்ந்து எதிர்க்கட்சியினருக்கு மரண அடி கொடுத்திருக்கிறார்கள். இனி அதற்கு வாழ்வில்லை, மூச்சில்லை, பேச்சில்லை.

புரட்சித் தலைவரின் ஆட்சியை கருணாநிதி மட்டுமல்ல இனி எந்த கொம்பன் வந்தாலும் அசைக்க முடியாது.

புரட்சித் தலைவரின் அரசு ஏழை எளியவர்களின் அரசு தொண்டர்களை மதிக்கும் அரசு சமீபத்தில் சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட்டைப் பார்த்தாலே இது நன்கு விளங்கும்

அதிலே எந்தப் பக்கம் புரட்டினாலும் ஏழை எளிய பாட்டாளி மக்களுக்கு சாதகமானதாகத் தான் இருக்குமேயல்லாதுபெரும் பணக்காரர்களுக்கு சாதகமானதாக நிச்சயம் இருக்காது.

இவ்வாறு அமைச்சர் ராஜேந்திரன் கூறினர்.

## சொத்து சேர்த்திருப்பது யார்?

# கருணாநிதிக்கு ப. உ. ச. சவால்

## 1957ல்இருந்து சொத்துவிவரத்தை கணக்கெடுக்கத் தயார்தானா?

**காஞ்சிபுரம், ஜூலை-28 1957ல் எம் எல் ஏ ஆனதிலிருந்து இன்று வரை எனக்குள்ள சொத்தையும் கருணாநிதிக்கு உள்ள சொத்தையும் கணக்கெடுப்போம் அன்று எனக்கிருந்ததை விட இன்று ஒரு குடிசையாவது அதிகமிருந்தால் அதை அண்ணா தி மு கழகத்துக்கு எழுதிவைத்துவிட நான் தயார் கருணாநிதி இதற்குத் தயாரா? என்று ப உ ச சவால்விட்டார்.**

காஞ்சிபுரம் தேரடியில் நடைபெற்ற பிரம்மாண்டமான கழக பொதுக் கூட்டத்தில் பொதுச் செயலாளர் ப.உ.ச, வெங்கடசுப்பரமணியம் எம்.எல்.ஏ கோபால் எம். எல். ஏ. காஞ்சி பன்னீர்செல்வம் புலவர் சகாதேவன் ஏ.பி. கண்ணபிரான், கே. பாலாஜி, ஏ. வீரமணி, பாலகிருஷ்ணன், ஆர். வி. கண்ணன், மூர்த்தி, பால் செட்டி. சபாபதி. தட்சிணாமூர்த்தி, எஸ் ஜி. பெருமாள், சி.பி. ராமச்சந்திரன், முனுசாமி- காந்தி. ராமு, சஞ்சீவி ஆகியோர் பேசினர்.

கூட்டத்திற்கு நடராசன் தலைமைவகித்தார். முனிர்ஜான் நன்றி கூறினர்.

பொது சசெயலாளர் ப உ ச பேசும்போது கூறியதாவது:-

கழகத்தின் கொள்கைக்கு மாறாக நடந்து கொண்டவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும். தமிழக முழுவதும் இருந்துபுகார்கள்வந்திருக்கின்றன, அதற்காக விசாரணை குழு அமைக்கப்படும் தவறு செய்தவர்கள் நீக்கப்படுவார்கள்.

(கைதட்டல்)

நான் கைதட்டல்பெற வேண்டும் என்பதற்காக சொல்லவில்லை கழகத்தை கட்டிக்காக்க வேண்டும் என்ற எண்ணத்தில் தான் புரட்சித்தலைவர் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார்.

## காத்திருக்கும் கழுகு

எதிர்க்கட்சிக்காரர்களுக்கு தீனி போடுவதற்கு யாரும்துணைபோகாதீர்கள் கழுகுபோல் காத்திருக்கிறார்கள். கழகம் துாளாகிப்போகுமா என்று பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

கழகப் பொதுக் குழு நடைபெற்ற வரை 15 தொண்டர்கள் உயிரிழந்திருக்கிறார்கள். அது இப்போது 19 பேராக உயர்ந்திருக்கிறது, மாற்றுக்கட்சியினர் கத்தியால் பதம் பார்த்துக்கொண்டிருக்கும் இப்படிப்பட்ட நேரத்தில் நாம் கட்டுக்கோப்போடு நடக்க வேண்டும் அப்போதுதான் கட்சியைக் காப்பாற்ற முடியும்.

கழகத்தில் சிறு கீறல் விழாதா? அதை பூகம்பமாக்கி காட்டலாமே என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

திமுக கரைந்து கொண்டிருக்கிறது. நாம் வளர்ந்து கொண்டிருக்கிறோம் நாம்ஒற்றுமையோடு இருந்தால் எந்த கொம்பனும் அழித்து விட முடியாது.

(கைதட்டல்)

நான்பேசுவதை தி.மு.க.வினர் கேட்டுகொண்டிருப்பார்கள். நான் சொல்வதில் நியாயமிருந்தால் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்துக்கு வாருங்கள்.

## கலைஞருக்கு கோபம்

திமுக கொள்கையை இழந்துவிட்டது இதை சொன்னால் என்மீது கலைஞருக்கு கோபம் வருகிறது ஆளைவிட்டு திட்டச்சொல்கிறார் அங்கிருந்து விலகி வந்தவர்களை ஆளைவிட்டு

(2-ம் பக்கம் பார்க்க)

## பக்கிங்ஹாம் கால்வாய் சீரமைப்பு

சென்னை, ஜூலை 28- உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்துத் திட்டங்கள் 50 சதவிகித உதவித் திட்டமாகக் கருதப்படும் என மத்திய அரசு அறிவித்தபடி, பக்கிங்ஹாம் கால்வாயை 3 கோடியே10லட்சம் ரூபாய் செலவில் சீரமைக்கும் திட்டத்தை மத்திய அரசின் ஒப்புதலுக்காக தமிழக அரசு அனுப்பியுள்ளது.

## புலிகேசி கட்டுரை நாளை







கோவை மாவட்ட

## மகளிர் பிரிவு பொதுக்கூட்டம்

கோவை, ஜூலை 28 உடுமலை அனைத்திந்திய அண்ணா திமுக கோவை மாவட்ட மகளிர் பிரிவு சார்பாக பொதுக் கூட்டமும், தமிழ்நாடு வேளாண்மை தொழில் கழகத் தலைவர் க. வியாகத் அலிகான் அவர்களுக்கு பாராட்டுக் கூட்டமும் 31-ந்தேதி மாலை 6-30 மணியளவில் தெப்பக்குளம் மைதானத்தில் மாவட்டமகளிர் அமைப்பாளர் உடுமலைலட்சுமி தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் கோவைதம்பி எம் எல் ஏ யு ஆர் கிருஷ்ணன் எம் பி சீதாதேவி எம் எல் சி, ப. வளர்மதி, செய்யதுமுகமது த மலரவன், பார்த்திமா பீபி, அண்ணாநம்பி, இராசம்மாள், சண்முக சுந்தரம், பவானி பழனியம்மாள், விஜயா சீதாலக்ஷ்மி மணிமேகலை, கௌசல்யா மற்றும் பலர் பேசுகின்றனர்.

*

தமிழ்நாட்டில்

## பெண் போலீஸ் நிலையங்கள்

கடலூர், ஜூலை 28- கடலூர் வந்த போலீஸ் டைரக்டர் ஜெனரல் டி டி பி அப்துல்லா நிருபர்களிடம் கூறியதாவது:-

நெடுஞ்சாலைகளில் ஏற்படும் சாலை விபத்துகளை தடுப்பது பற்றி ஆராய தனிக் குழு அமைப்பது பற்றி நெடுஞ்சாலைத்துறை அதிகாரிகளுடன் ஆலோசனை நடந்து வருகிறது.

கேரளாவில் உள்ளதுபோல் முழுவதும் பெண் போலீசாரைக் கொண்ட போலீஸ் நிலையங்களை தமிழ்நாட்டில் அமைப்பது பற்றியும் ஆலோசனை நடந்து வருகிறது.

இவ்வாறு அப்துல்லா கூறினார்.

*

## நாசரேத்நகருக்கு குடிநீர்

சென்னை, ஜூலை 28- நாசரேத் குடிநீர் திட்டத்திற்கு அரசு நிர்வாக ஒப்புதல் அளித்து ஒப்பந்தப்புள்ளிகள் கோரப்பட்டுள்ளன. விரைவில 81ம் ஆண்டு மார்ச் மாதத்திற்குள் குடிநீர் வழங்கப்படலாம் என்று அமைச்சர் ராகவானந்தம் கேள்வி ஒன்றுக்கு பதிலளித்து சட்டசபையில் தெரிவித்தார்.

*

## ஈரான் மன்னர் ஷா மரணம்

கெய்ரோ, ஜூலை. 29- கடந்த சில மாதங்களாக புற்றுநோய் உட்பட பல்வேறு நோய்களால் அவதிப்பட்டு வந்த ஈரான் மன்னர் ஷா கெய்ரோவில் மரணமடைந்தார் அவருக்கு வயது 60.

79ம் ஆண்டு ஜனவரியில் ஈரானில் கோமேனி தலைமையில் நடந்த புரட்சியில் பதவி இழந்து நாட்டைவிட்டு ஓடிய ஷா, எகிப்து, பனமா, மெக்சிக்கோ மொராக்கோ நாடுகளில் தஞ்சம் அடைந்து ஒவ்வொரு நாட்டிலும் சிறிதுகாலம் தங்கியிருந்தார்

பிறகு புற்று நோய்க்கு அமெரிக்காவில் சிகிச்சைப் பெற்றார். ஈரான் நாட்டினர் இதற்கு எதிர்ப்பு தெரிவித்து 50 அமெரிக்கர்களை பிணையாட்களாக பிடித்து வைத்தனர் பிறகு ஷா மீண்டும் எகிப்தில் தஞ்சமடைந்தார்.

ஷாவின் உயிர் பிரியும் நேரத்தில அவரது மனைவி பரா உடனிருந்தார்.

## பேச்சாளர் முகவரி

இரா. அமிர்தராஜ்
9, வில்லி குடியிருப்பு
கிறிஸ்தியா நகரம் பி. ஒ.
உடன்குடி
நெல்லை

கே. ஏ. கே. பேச்சு:

# எதிர்க் கட்சித் தலைவர் பதவி போய்விடுமே என பதறும் கருணாநிதி

சென்னை, ஜூலை 28- இன்னும் ஏழு எம் எல் ஏக்கள் தி மு க விலிருந்து போய்விட்டால் தனது எதிர்க்கட்சி தலைவர் பதவி போய் விடுமே என்ற பதட்டத்தில் கருணாநிதி புலம்புகிறார் என்று கே ஏ கே கூறினார்.

புரட்சித்தலைவர் எம்.ஜி ஆர். மன்றத் திறப்பு விழாவும், மோகனரங்கம் எம்.பி, அப்துல் ரசாக் எம்.எல்.ஏ ஆகியோர்க்கு பாராட்டுகூட்டமும் வாக்காளர்களுக்கு நன்றி அறிவிப்புக் கூட்டமும் பழவந்தாங்கலில் நடைபெற்றது.

கூட்டத்துக்கு வி. சீனுவாசன் தலைமைவகித்தார எஸ் டி கிருஷ்ணன் அனைவரையும் வரவேற்றார்.

புரட்சித்தலைவர் எம் ஜி. ஆர். மன்றத்தை அமைச்சா கே ஏ கே திறந்துவைத்தார். கூட்டத்தில் ராமதாஸ், சொக்கலிங்கம், ஆலந்தூர் ராதா, முருகேசன், பாபு, காசிநாதன். மகளிர் பிரிவு ராஜேஸ்வரி மற்றும் பலர் பேசினர்.

அமைச்சர் கே ஏ கே வாக்காளர்களுக்கு நன்றி தெரிவித்து பேசியதாவது:

தமிழகத்தில் புரட்சித் தலைவர் தலைமையின் கீழ் தான் நிலையான ஆட்சி ஏற்படுத்த முடியும் என்று எண்ணி மக்கள் வாக்களித்துள்ளனர். ஆட்சி கலைக்கப்பட்ட பின்பு நம்மிடம் பணம் இல்லை, அதிகாரம் இல்லை, ஆனால் நம்மிடம் நீதி, நேர்மை, சத்தியம் இருந்ததால் தேர்தலில் வெற்றி பெற்றோம்.

### நிறைகுடம்

புரட்சித்தலைவர் அடக்கமாக, நிறைகுடமாக அன்றும் இருந்தார். இன்றும் இருந்து வருகிறார். தேர்தலில் காமராசர், அண்ணா போன்றோர் வெற்றிவாய்ப்பை இழந்தபோது அமைதியாக சமநிலையில் இருந்தனர். விஷக்கருத்துக்களைக் கூறி தூண்டிவிடவில்லை.

கருணாநிதியால் இன்று சமநிலையில் இருக்க முடியவில்லை. பணம் கொடுத்து எங்கள் கட்சி எம் எல் ஏ-வை இழுத்து விட்டதாகக் கூறுகிறார் தோழமைகட்சி ஒத்துழைப்புடன முழுப் பெரும் பான்மையுடன் இருக்கும் புரட்சித் தலைவரின் அரசு அவர்களை பணம்கொடுத்து அழைக்கவில்லை அவர்களுக்கு நம்மைப்போல் மனசாட்சி உறங்காமல் விழித்துக் கொண்டிருந்ததால் அக் கட்சியை விட்டு விலகிவந்துள்ளனர் இப்போது இப்படி பேசும் கருணாநிதி ஆட்சி கலைத்தவுடன் நம்மிடமிருந்தவர்களை அழைத்துக் கொள்ளவில்லையா அதுபற்றி புரட்சித்தலைவர் ஏதாவது பேசினாரா?

தம்கட்சியில் உள்ள சட்டமன்ற உறுப்பினர்களை முறையாக வைத்துக் கொள்ள முடியாத கருணாநிதி புலம்புகிறார் இதுமபால் இன்னும் ஏழு எம். எல். ஏக்கள் மனம் மாறினால் நம் எதிர்கட்சிக் தலைவர் பதவி பறிபோய்விடும் என எண்ணி பதற்றுகிறார் தேர்தலில் அக்கினி பரிட்சையை கடந்து நாம ஆட்சியை அமைத்துள்ளோம்.

இவ்வாறு அமைச்சர் கே ஏ கே பேசினார்.

### மோகனரங்கம் எம். பி.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்தும வாக்காளர்களுக்கு நன்றி தெரிவித்தும் மோகனரங்கம் பேசுகையில கூறியதாவது:

பொதுமக்களாகிய நீங்கள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள் என்னை பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுத்துள்ளனர். தமிழக அரசுக்கு கிடைக்க வேண்டிய முறையான பங்கினை பெறவும், தமிழக மக்கள் வாழ்க்கைத்தரம் உயரவும் மத்திய அரசிடம் வாதாடி தேவையானவற்றை பெற முயலுவேன்.

உங்களுக்கு தேவையான வசதியை செய்ய தமிழகத்திலே அப்துல்ரசாக் எம் எல் ஏவும் டெல்லியிலே நானும் இருக்கிறேன் என் இல்லக் கதவுகள் உங்களுக்காக எப்போதும் திறந்தே இருக்கும். இப்போது என்னைப் பாராட்டும் நீங்கள் இனியும் என்னைப் பாராட்டும் வகையில் நான் நடந்து கொள்வேன்.

இவ்வாறு மோகனரங்கம் பேசினார்.

### அப்துல்ரசாக் எம். எல். ஏ.

வாக்காளர்களுக்கு நன்றி தெரிவித்து அப்துல் ரசாக் எம் எல் ஏ பேசியதாவது:-

பெருவாரியான வாக்கு வித்தியாசத்தில் என்னை வெற்றிபெறச் செய்த உங்களுக்கு நன்றிசொல்வதோடு அல்லாமல் என்றென்றும் உங்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். இப்பகுதியில் சாலைவசதி, பாலம் கட்டுதல், குடிநீர் போன்ற குறைகள் இருப்பதை உணர்ந்து சட்டமன்றத்தில் பேசி இருக்கிறேன் நடப்பு ஆண்டில் குடிநீருக்காக நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இன்னும் ஓராண்டில் இப்பணி முடிவடைந்து விடும் எரியாமல் இருக்கும் தெரு விளக்குகளை சரி செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது விவசாயிகள் கடன் ரூ 60 கோடி தள்ளுபடி செய்யப்பட்டுள்ளது நான் மலையை கொள்ளையடித்ததாக குற்றம் சாட்டினார்கள் புரட்சித்தலைவர் ஆட்சிக்கு முன் ரூபாய் நாலாயிரத்துக்கு ஏலம் விடப்பட்ட மலை, புரட்சித்தலைவர் ஆட்சியில் ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் ஏலம் விடப்பட்டு இருக்கிறது. இதில் இருந்து கொள்ளையடித்தது யார் என்பது உங்களுக்கு விளங்கும்.

இவ்வாறு அவர் பேசினார்.

கோவைநகர மன்ற தோழர்களுக்கு

## அண்ணாநம்பி வேண்டுகோள்

கோவை, ஜூலை. 28 கோவை தொகுதி கழக மன்றத் தோழர்களுக்கு கோவை நகர மன்ற பொறுப்பாளர் அண்ணா நம்பி ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

அதில் அவர் கூறியுள்ளதாவது:-

கோவை நகரில் உள்ள கிழக்கு மேற்குத் தொகுதிகளை சேர்ந்த புரட்சித்தலைவர் எம் ஜி ஆர மன்றதுணை சார்பு மன்றத் தோழர்கள் நடந்து முடிந்த தலைமைப் பொதுக் குழுவில் புரட்சித் தலைவர் மற்றும் பொதுச் செயலாளர் ஆகியோரின் அறிவிப்பின்படி விரைவில் கட்சித் தேர்தல் நடைபெறவிருப்பதால் என்னிடம் கட்சி உறுப்பினர் சேர்க்கும் பாரம் பெற்றுச்சென்ற தோழர்கள் அதனைப் பூர்த்தி செய்து உரிய தொகையுடன்வரும 31-ந் தேதிக்குள் (ஜூலை மாதம்) தலைமைகழகத்திற்கு உடன் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன் மற்றும் இதுவரை, தலைமைமன்றத்தல் பதிவு செய்யாத மன்றங்கள் உடன பதிவு செய்துகொள்ளுமாறும் கேட்டுக் கொள்கிறேன்

இவ்வாறு அவர் தனது வேண்டுகோளில கேட்டுக் கொண்டுள்ளார்.

## பரங்கிமலை நாகராசன் நிகழ்ச்சிகள்

ஆகஸ்டு 1 அனகாபுத்தூர், 2 செங்கை மாவட்டம், அண்ணா இலக்கியத் தமிழ் மன்ற கூட்டம் 4 மதுரை மாவட்டம், 5 சென்னை.

முகவரி:
பரங்கிமலை நாகராசன்
26-ஏ நெருஞ்சாலை
சீனுவாசநகர்
சென்னை-600063

பச்சையப்பன் கல்லூரி டிரஸ்டு போர்டு தேர்தல்

# என்டிஎஸ்,ஐசரிவேலன் தேர்தல் செல்லும்: ஐகோர்ட் தீர்ப்பு

சென்னை, ஜூலை. 28- பச்சையப்பன் கல்லூரி டிரஸ்ட்போர்டு உறுப்பினர்களாக ஐசரிவேலன் நெ து. சுந்தரவடிவேலு ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லும் என்று சென்னை உயர் நீதிமன்றம் இன்று தீர்ப்பு வழங்கியது.

பச்சையப்பன் கல்லூரி டிரஸ்ட் போர்டு இரண்டு உறுப்பினர்களுக்கான தேர்தல் கடந்த 31 7 78ம நாள் அன்று நடந்தது. இதில் 7 பேர் போட்டியிட்டனர். முன்னாள் சட்டமன்ற கழக உறுப்பினர் ஐசரிவேலன், என் டி சுந்தரவடிவேலு ஆகியோர் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

உறுப்பினர்களாக ஐசரி வேலன், நெ து சுந்தரவடிவேலு தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது. தேர்வை ரத்து செய்யவேண்டும். ஐசரிவேலன் கிறிஸ்துவமதத்தை சார்ந்தவர் என்று மாரப்பன் (தி. மு. க.) கண்ணசன் ஆகியோர் உயர்நீதி மன்றத்தில்வழக்குத்தொடர்ந்தனர்

### தேர்வு செல்லும்

வழக்கை விசாரித்த உயர்நீதிமன்ற நீதிபதி சத்தியதேவ் இறுதிதீர்ப்பு வழங்கினார்

ஐசரிவேலன், நெ. து. சுந்தரவடிவேலு ஆகிய இருவரும் சட்டப்படி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். தேர்வில் சட்ட மீறல் இல்லை இருவரும் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லும் என்று கூறி மாரப்பன் (திமுக) தொடர்ந்த வழக்கை நீதிபதி தள்ளுபடி செய்தார்.

தேர்வு ரத்து செய்வதற்கு தேவையான ஆதாரமில்லை ஐசரிவேலன் நெ து சுந்தரவடிவேலு ஆகிய இருவரும சட்டப்படி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர் என்றும் நீதிபதி தனது தீர்ப்பில் கூறியிருக்கிறார்.

### மற்ற வழக்குகளும் ரத்து

இந்த தேர்தல்பற்றி தனித்தனியாக மற்ற 8 பேரும போட்டிருந்தவழக்குகளும் இந்த தீர்ப்பை யொட்டி ரத்து செய்யப்படுகின்றன.

ஐசரிவேலன். நெ து சுந்தரவடிவேலு ஆகியோருக்காக கழக வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு ஆஜரானார்.

## உடல்பயிற்சி ஆசிரியர்கள் உண்ணாவிரதம் வாபஸ்

சென்னை, ஜூலை 28- தமிழ்நாடு உடல் பயிற்சி ஆசிரியர்கள் உண்ணாவிரதம் பற்றி சட்டசபையில் ஒரு ஒத்திவைப்பு தீர்மானம் கொண்டுவரப்பட்டது. அதற்கு கல்வி அமைச்சர் பதிலளிக்கையில் அவர்களது கோரிக்கைபற்றி பரிசிலித்திருப்பதாகவும் மேலும் பேச்சுவார்த்தை நடத்தி இருப்பதாகவும், உண்ணாவிரதம் தற்போது நிறுத்தப்பட்டதாகவும் தெரிவித்தார்.

அமைச்சரின் பதிலுக்கு பிறகு ஒத்திவைப்பு தீர்மானத்திற்கு அனுமதி மறுக்கப்பட்டது.

*

## திமுக பிரமுகர் கழகத்தில் இணைந்தார்

கடலூர், ஜூலை 28- திமுக தொழிற்சங்கங்களின் தலைவரும், தந்தை பெரியார் போக்குவரத்து கழக திமுக தொழிற்சங்க செயலாளருமான எஸ் சாரங்கபாணி தலைமையில் 15 திமுக தொழிற்சங்கத்தினர் அக்கட்சி தொழிற்சங்கத்திலிருந்து விலகி தந்தை பெரியார் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற சங்கத்தில் தொழிற்சங்க துணைத்தலைவர் ஆர் ஜெயராமன் முன்னிலையில் சேர்ந்தனர்.

# ப. உ. ச. சவால்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

அடிக்கச் சொல்கிறார்.

காஞ்சிபுரத்திலிருக்கும் சி.வி.எம் அண்ணாமலை போன்றவர்களெல்லாம் மொழி போராட்டத்திற்காக சிறைக்குபோகாதவர்கள் அல்ல.

இந்தித் திணிப்பை எதிர்த்து உயிரை விட்டவர்கள் பலபேர் பெட்ரோல் ஊற்றி தீவைத்துக் கொண்டவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் பெயர் விளம்பரமில்லாவிட்டாலும் வரலாற்றில் எழுதப்பட்டே தீரும்,

1967ம் ஆண்டு அண்ணா அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்றினார்.

பண்டித நேரு முதல் காமராஜர் வரை மும்மொழி திட்டத்தை பேசினார்கள். ஆனால் அண்ணா அவர்கள் உலக மொழி ஆங்கிலத்தையும் தாய் மொழி தமிழை மட்டுமே கற்றுக் கொடுப்போம் என்று சொன்னார், சட்டமன்றத்திலே அதை தீர்மானமாக நிறைவேற்றிக் காட்டினார்.

### தி. மு. க. மவுனம்

அப்படி தீர்மானம் போட்ட சட்டமன்றத்திலே இன்றைக்கு 13 ஆண்டுகள் கழித்து மும்மொழி குரல் கேட்கிறது. சட்டசபையில் என். எஸ், வி. சித்தனும், மேலவையில் திண்டிவனம் ராமமூர்த்தியும் பேசுகிறார்கள். அது அவர்களுடைய கொள்கை.

ஆனால் இன்றுவரை கருணாநிதியாகட்டும். அன்பழகனாகட்டும் தி. மு. க, வினர் யாருமே மொழிப் பிரச்சினை பற்றி வாய் திறக்கவில்லை.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம, அண்ணா நிறைவேற்றிய தீர்மானம்தான் எங்கள் திட்டம் என்று சொன்னார்.

ஆனால் மானங்கெட்டவன், ரோஷமில்லாதவன் சுயமரியாதை இல்லாதவன் என்று எழுதுகிறார் கருணாநிதி. யாரைபார்த்து இப்படிக் கேட்கிறார்?

### தங்ககிரீடம் பவனி-பாவம்!

பதவி ஆசை அவரை பேசச் சொல்கிறது தங்க கிரீடம், வள்ளுவர் கோட்டத்தில் பவனி, கோட்டையில் நிருபர்களுக்கு பேட்டி என்று முதலமைச்சர் பதவி கனவு கண்டவர் அல்லவா?

எத்தனை தொழிலதிபர்களை மிரட்டி தேர்தல்நிதி வசூலித்தார்கள் என்ற பட்டியல் வந்துகொண்டே இருக்கிறது.

அண்ணா தி மு கழகம் மக்கள் நம்பிக்கையைப் பெற்றிருக்கிறது. இனியாவது திருந்துவார் என எதிர்பார்த்தேன், திருந்தவில்லை முதலமைச்சர்பதவியைஎதிர்பார்த்து ஏமாந்துபோனவர் எரிச்சல் அடைந்திருக்கிறார், 'கருணாநிதிதான் முதல்வர் என்று முன் கூட்டியே அறிவித்ததுதான் தோல்விக்கு காரணம்' என்று சொல்லியிருக்கிறார்கள் இந்திரா காங்கிரசார் தி.மு.க, வினரால் எப்படி தாங்கிகொள்ள முடிகிறது?

இதற்குகருணாநிதி பதில் சொல்லவில்லை. என்மீது கோபத்தைக் காட்டுகிறார் கருணாநிதி தெரியசாலி ஆயிற்றே; ஏன் இந்திரா காங்கிரசாருக்குப் பதில சொல்ல முடியவில்லை.

'உடன்பிறப்பே நீ கொஞ்சம் வேலை செய்திருந்தால் இந்த நிலைமை வந்திருக்காது' என்று எழுதுகிறார்.

இந்திரா காங்கிரசார் கருணாநிதி மீது குற்றம் சாட்டுகிறார்கள், கருணாநிதி தொண்டர்கள் மீது குற்றம் சாட்டுகிறார், திமுகவினர் வேலை செய்யாதவர்களா? உழைத்து உழைத்து ஓடாகத் தேய்ந்திருக்கிறவர்கள் மீது தன் மீது வந்த பழியை சுமத்துகிறார்.

சட்டமன்ற உறுப்பினர்களை தூண்டிவிட்டு அரிசி பேர ஊழல் தெரியுமா என்று பேசச் சொல்கிறார்.

அந்த குற்றச்சாட்டு வந்தவுடனே வழக்கு போடச்சொல்லி நிரபராதி என்று தீர்ப்பு வாங்கி வைத்திருப்பவன் நான்.

அந்த தீர்ப்பில் கருணாநிதி தான் கையெழுத்து போட்டிருக்கிறார்.

### எது தவறு?

அப்படியானால் வழக்கை விசாரித்த நீதிபதி ராமபிரசாத்ராவ்தீர்ப்புதவறா? கருணாநிதி கையெழுத்து போட்டது தவறா?

கோதுமை வழக்கு அப்படியா? சென்னையிலுள்ள மதன்லால் என்ற மாவு அதிபரிடம் வெளி மாநிலத்திலிருந்து கோதுமையை வரவழைத்துக் கொள்ள இரண்டரை லட்சம் ரூபாய் லஞ்சம் வாங்கியதாக அப்போது உணவு அமைச்சராக இருந்த மன்னை நாராயணசாமியே அப்ருவராக சாட்சியளித்திருக்கிறார் அந்த குற்றச்சாட்டை சுமத்தியது இந்திரா காங்கிரஸ் தானே?

கருணாநிதிநிரபராதியாக வரவேண்டும்என்றுவிரும்புகிறவன் நான், அவர் வர முடியாது. வழக்கேநடக்கவில்லையே? நடக்கவிடவில்லையே! அதனால்தான் உறவை முறித்துக் கொள்ள முடியவில்லை.

32 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 100 ரூபாய் நோட்டுக்களை சில்லரை மாற்றியதாக குற்றம் சாட்டியது இந்திராதானே? கோதுமை பேர வழக்கு போட்டது இந்திராதானே?

ஆட்சியைகலைத்த பின்பு கடற்கரையில் நடந்த கூட்டத்தில் பேசிய இந்திராகாந்தி' வீராணம் ஊழல் செய்த ஆட்சியை கலைத்தேன்' என்று சொன்னாரே?

பதவிக்காகவா கட்சியை ஆரம்பித்தோம்? என்று கேட்கிறார் கருணாநிதி. இவரா கட்சியை ஆரம்பித்தார்? பதவி தேவை இல்லை என்றால் அரசியல் கட்சி எதற்கு? எம் எல் ஏ. பதவி எதற்கு? எதிர்கட்சி தலைவர் பதவி எதற்கு? முதலமைச்சர் பதவியை ஏன் நினைக்க வேண்டும். அரசியல் ஏன் நடத்த வேண்டும்? பெரியாரைப் போல சமுதாய தொண்டு செய்யப் போகலாமே?

### கருணாநிதிக்கு சவால்

கருணாநிதிக்கு சவால் விடுகிறேன். ஏற்கத் தயாரா? 1957-ம் ஆண்டு நான் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அப்போது என் சொத்து எவ்வளவு என்பதை ரிஜிஸ்டர் ஆபீசில் எடுத்துக்கொள்வோம் அப்போது கருணாநிதிக்கு எவ்வளவு சொத்து என்பதையும் ரிஜிஸ்டர் ஆபீசில் எடுத்துக் கொள்வோம் கணக்கு பார்ப்போம். அதிகப்படியாக ஒரு குடிசை வீடு இருந்தால் கூட அதை அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்துக்கு எழுதி வைத்து விடுகிறேன்.

நான் தயார்? கருணாநிதி தயாரா?

நெல்லிக்குப்பம்கிருஷ்ணமூர்த்திக்கு சட்டமன்ற உறுப்பினர் ஆகும் முன்பு எவ்வளவு சொத்து? இப்போது எவ்வளவு?

ஆற்காடு வீராசாமிக்கு 67க்கு முன்பு எவ்வளவு சொத்து? இப்போது எவ்வளவு?

முதலமைச்சராகஇருந்த போது நட்டக்கணக்கு காட்டிய வரையிற்றே கருணாநிதி! முரசொலிக்கு வந்திருக்கும் மெஷின்களின் மதிப்பு 25 லட்சம் ரூபாய்'

### 5 மாடி வந்தது எப்படி?

67க்கு முன்பு அண்ணா சாலையில் ஓட்டு கட்டிடமாக இருந்த முரசொலி இடத்தில் இப்போது 5 மாடி கட்டிடம் எப்படி வந்தது?

கருணாநிதி என்ன பதில் சொல்லுவார் என்பது எனக்குத் தெரியும், இந்தியன் பாங்கில் 7 லட்சம் ரூபாய் கடன்வாங்கினேன என்பார். அந்தக் கட்டிடத்தை 10 லட்சம ரூபாய்க்கு அண்ணா தி மு கழகத்திற்கு வாங்கத் தயார்?

இப்போது முரசொலி பத்திரிகை இருக்கும் கோடம்பாக்கம் கட்டிடம் எப்போது வாங்கியது?

முதலமைச்சர் ஆனபிறகு அல்லவா?

என்னைவிட கருணாநிதியிடம் நெருங்கி பழகியவர்கள் யாரும் இருக்க முடியாது. அவரை தெரிந்த பிறகு யாரும் இருக்கவும் முடியாது. நல்லவர்கள் வெளியே வாருங்கள்.

புரட்சித் தலைவருக்கு கருணாநிதி மீது கோபமில்லை கருணாநிதி திருந்த வேண்டும் என்பதுதான். கருணாநிதி திருந்த மாட்டேன் என்கிறார்.

பாண்டிச்சேரியில் கூட்டணி ஆட்சி அமைந்த பின் எத்தனை கழகத்தோழர்கள் கொல்லப் பட்டிருக்கிறார்கள். இங்கே கூட்டணி ஆட்சி அமைந்திருந்தால் எத்தனை பேர் உயிர் விட்டிருக்கவேண்டி இருக்கும்?

திமுக விலுள்ள அடிமட்டத் தொண்டர்கள் தி மு கவும், அண்ணா தி மு கழகமும் இணைய வேண்டும் என்று நினைக்கலாம். இனி அந்த எண்ணத்திற்கே இடமில்லை,

இவ்வாறு ப. உ. ச. கூறினார்,

## பெரம்பூர் ஜனதாவினர் கழகத்தில் இணைந்தனர்

சென்னை, ஜூலை 28- சென்னை பெரம்பூர் தொகுதி ஜனதா கட்சி செயலாளர் இ பார்த்தசாரதி தலைமையில் 75 பேர் கழக தலைமைநிலைய செயலாளர் எம் எஸ் அப்துல் காதர் முன்னிலையில் அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தில் இணைந்தனர்.

அப்போது எஸ் கிருஷ்ணசாமி பன்னீர்செல்வம், கவிஞர் முருகுராம், முனியாண்டி காஞ்சி சண்முகம், சிட்டிப்பா முனுசாமி ஆகியோர் உடனிருந்தனர்.

## மூலகொத்தளம்

29-7-80செவ்வாய்மாலை 7-மணிக்கு அழகிரி திடலில் ஆர் கே வேலுதலைமையில் பேசுவோர்:

அமைச்சர் பா குழந்தை வேலு, எம். எஸ். அப்துல் காதர், ஜி கே எஸ் எம் எல் ஏ, கண்ணப்பராஜேந்திரன். தஞ்சை தமிழழகன் மீரான்பாய், ஜெயபால், உபகாரமேரி, செங்கோல்தாஸ், தங்கதுரை, மற்றும் பலர்.

## சைதாப்பேட்டை

29-7-80செவ்வாய்மாலை 7 மணிக்கு வர்த்தக சங்க திருமண மண்டபத்தில் குடிசை மாற்று வாரியத் தலைவர் டி கே கபாலி எம் எல் ஏ தலைமையில் அண்ணா சிறு கடை வியாபாரிகளுக்கு வங்கி கடன் வழங்கும் விழா. பங்கேற்போர்: அமைச்சர்திருநாவுக்கரசு, வை பெருமாள், கே எஸ் தினகரன், சைதை துரைசாமி, சைதை கண்ணன், ஜீஏ கேசவன் எஸ். டி ஜெயராமன் மற்றும்பலர்.

## பேச்சாளர் முகவரி

எஸ். கோவிந்தராசு
வீரகனூர் ஆத்தூர் வட்டம்
சேலம் மாவட்டம்

வெங்கல் வேந்தன்
223, நரசிங்கபுரம்
திருவள்ளூர் வட்டம்
செங்கை மாவட்டம்

மண்ணடி
கிருஷ்ணமூர்த்தி
21 பவழக்காரத் தெரு
மண்ணடி
சென்னை-1

அண்ணாகுரல்
ஜி கே சாமி
176 குடிசை மாற்றுவாரியம்
பூண்டி தங்கம்மாள்தெரு
சென்னை-81

பி. ஆர் தூசைராஜ்
நகர அமைப்பாளர்
அனைத்திந்திய அண்ணா
தி. மு. க.
புன்செய் புளியம்பட்டி,
சத்தி வட்டம்
பெரியார் மாவட்டம்

★ விவசாய விளைபொருள்கள் விலை நிர்ணய கமிஷனின் முடிவு தவறானது

★ தமிழகத்தில் சாகுபடி செலவு குவிண்டாலுக்கு ரூ. 124 ஆகிறது

★ கோதுமைக்கும் நெல்லுக்கும் ஒரே விலை தருக

# நெல் விலை குவிண்டாலுக்கு ரூ130 ஆக உயர்த்துக

## மத்திய அரசிடம் கழக அரசு வலியுறுத்தல்

புதுடெல்லி, ஜூலை. 28- விவசாய விளைபொருள் விலை நிர்ணயக் கமிஷன் நிர்ணயித்துள்ள நெல் கொள்முதல் விலையான குவிண்டாலுக்கு 100 ரூபாய் என்பது தவறானது. தமிழ்நாட்டில் சாகுபடி செலவு குவிண்டாலுக்கு 124 ரூபாய் வரை ஆகிறது என்றும் ஆகவே நெல் கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு 130 ரூபாய் என நிர்ணயிக்க வேண்டும் எனவும் மாநில முதலமைச்சர்கள் மாநாட்டில் தமிழ்நாட்டின் சார்பில் வலியுறுத்தப்பட்டது.

மாநில முதலமைச்சர்கள் மாநாட்டில் தமிழ்நாட்டின் சார்பில் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் உணவு அமைச்சர் காளிமுத்து ஆகியோர் கலந்து கொண்டனர்.

இக்கூட்டத்தில் நெல் கொள்முதல் விலையை உயர்த்தவேண்டும் என்று பெரும்பாலான மாநில அரசுகள் சார்பில் வலியுறுத்தப்பட்டது.

பெருமளவிற்கு நெல் கொள்முதல் செய்யும் மாநிலங்களான ஆந்திரா தமிழ்நாடு, கர்நாடகா மாநிலங்கள் நெல் கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு 130 ரூபாய் ஆக நிர்ணயிக்க வேண்டும் என வலியுறுத்தின.

மாநாட்டில் தமிழக அரசின் கோரிக்கையை வலியுறுத்திப் பேசுகையில், மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:

விவசாய விளைபொருள்கள் விலை நிர்ணயக்கமிஷன் சிபாரிசு செய்துள்ள விலை நடைமுறைக்கு ஏற்றதல்ல தவறான வகைகளின் அடிப்படையில் அந்த சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.

சாகுபடி செலவு கணக்கிடுவதில் விவசாயப் பல்கலைக் கழகம் நடத்திய மாதிரி ஆய்வுகளை விவசாய விளைப் பொருள்கள் விலை நிர்ணயக் கமிஷன் அடிப்படையாகக் கொண்டுள்ளது.

விவசாயப் பல்கலைக் கழகம் 500 ஹெக்டேர் பரப்பில் அடங்கிய 100 பண்ணைகளில் மட்டுமே ஆய்வு நடத்தியது.

ஆனால் 25 லட்சம் ஹெக்டேர் நிலப்பரப்பில் 18லட்சம் பண்ணைகள் உள்ளன.

### செலவு எவ்வளவு?

தமிழ்நாட்டில் ஒரு குவிண்டாலுக்கு 124 ரூபாய் செலவு ஆகிறது என தமிழ்நாடு அரசு கணக்கிட்டுள்ளது.

விவசாயி தொடர்ந்து ஊக்கத்துடன் சாகுபடி செய்ய குறைந்தபட்சம் ஒரு குவிண்டாலுக்கு ரூ. 130 அளிக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் சென்ற ஐந்து வருடங்களில் செய்யப்பட்ட நெல்சாகுபடி, சராசரி விளைச்சல் ஆகியவற்றின் அடிப்படையில்தான் தமிழக அரசு சாகுபடிச் செலவைக் கணக்கிட்டுள்ளது.

சாகுபடியில் எதிர்பாராமல் ஏற்படக்கூடிய இன்னல்கள், இழப்புகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டன.

### பாரபட்சம் ஏன்?

கோதுமைக்கு கொடுக்கப்படும் கூடுதல் கொள்முதல் விலையை ஆட்சேபிக்கவில்லை ஆனால் கோதுமை கொள்முதல் விலைக்கும், நெல் கொள்முதல் விலைக்கும் இடையே சமத்துவம் நிலவ வேண்டும்.

விவசாய விளை பொருட்கள் விலை நிர்ணயக்கமிஷன் கோதுமை சாகுபடிக்கு குவிண்டாலுக்கு 103 ரூபாய் ஆவதாக கணக்கிட்டு 14-50 ரூபாய் அதிகம் வைத்து கோதுமை கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு 117.50 ஆக நிர்ணயித்துள்ளது.

ஆனால், நெல் சாகுபடி செலவு குவிண்டாலுக்கு 92 ரூபாய் செலவாவதாக கணக்கிட்ட விவசாய விளை பொருட்கள் விலை நிர்ணய கமிஷன் 8 ரூபாய்மட்டுமே அதிகம் வைத்து நெல்கொள்முதல் விலையை குவிண்டாலுக்கு 100ரூபாயாக நிர்ணயித்துள்ளது என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

### வேண்டாம் வேறுபாடு

விவசாய விளை பொருட்கள் விலை நிர்ணயக் கமிஷனில் 7.8.79-ல் உறுப்பினராகயிருந்த சவுத்ரி ரண்தீர் சிங், கோதுமைக்கும், நெல்லுக்கும் கொள் முதல் விலையில் உள்ள வேறுபாடு நீக்கப்படவேண்டும் என குறிப்பிட்டிருந்ததையும் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

ஆந்திர மாநில விவசாய துறை அமைச்சர் வெங்கட்ராவ் பேசுகையில் நெல் கொள்முதல் விலைக்கும் கோதுமை கொள்முதல் விலைக்கும் விலை நிர்ணயம் செய்யும் போது பாரபட்சம் காட்டுவது ஏன் எனக் கேட்டார். நெல்கொள்முதல்விலையை குவிண்டாலுக்கு 130 ஆக நிர்ணயிக்க வேண்டும் எனவும் அவர் வலியுறுத்தினார்.

---

நாகர் கோவிலில்

## 25 பேர் கழகத்தில் இணைந்தனர்

நாகர்கோவில், ஜூலை 29- நாகர் கோவில் 32-வது வட்டத்தைச் சேர்ந்த ஜனதாக் கட்சியினர் 25 பேர் அந்தக் கட்சியிலிருந்து விலகி ஏ கருணாகரன் தலைமையில் கழகத்தில் இணைந்தனர். மாவட்ட மாணவர் அமைப்பாளர் அ செல்வின் குமார் முன்னிலையில் அவர்கள் கழகத்தில சேர்ந்தனர்.

---

செயற் பொறியாளர் அலுவலகம் பிரிவு - IV

தமிழ் நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியம் சென்னை 600 010

## டெண்டர் அறிவிப்பு

RCC-4004-SCB IV-D1-80

தேதி 14 7 80

கீழ்க்கண்ட பணிகளுக்கான மூடி முத்திரையிட்ட டெண்டர்களை கவரின்மேல் வேலை மற்றும் டெண்டர்தாரரின் பெயர் முதலியவைகளை குறிப்பிட்டு 12-8-80 அன்று பிற்பகல் 3 மணிவரை கீழ் கையொப்பமிட்டவர் வரவேற்கிறார். வந்து சேர்ந்த டெண்டர்களை அன்றே பிற்பகல் 3-15 மணிக்கு ஆஜராகியுள்ள டெண்டர்தாரர்களின் முன்னிலையில் திறக்கப்படும்.

வேலையின் பெயர்:- அசோக்நகர் திட்டத்தில் கவர் ஸ்லாப் போடுதல்.

வேலையின் தோராய மதிப்பு:-ரூ,63,000/-

ஒப்பந்த வடிவம் மற்றும் டேவணித்தொகை டெபாசிட் எல் எஸ். ரூ 915-

டெண்டர் டாக்குமெண்டுகளின் விலை-ரூ. 30+ வி.வ.

வேலையின் காலம்:- இரண்டு மாதங்கள்

டெண்டர் ஷெட்யூல் மற்றும் இதர விவரங்களை செயற்பொறியாளர், கு. மா. வா, பிரிவு IV டி. பி. சத்திரம், சென்னை-10 அவர்களின் அலுவலகத்திலிருந்து 4-8-80 முதல் 11-8 80 வரை எல்லா வேலை நாட்களிலும் அலுவலக நேரம் காலை 10 மணி முதல்மாலை 3 மணிவரை பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் டாக்குமெண்டுகளை அதன் விலை, விற்பனை வரி மற்றும் 4% சர்சார்ஜ் செலுத்தியதற்கான சலானை சமர்ப்பித்து பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் ஷெட்யூலின் விலை மற்றும் விற்பனை வரியை இந்தியன் ஓவர்சீஸ் பாங்க். அமைந்தகரை கிளை. சென்னை 29ல் செயற்பொறியாளர் கு. மா. வா. பிரிவுIV கீழ்ப்பாக்கம் சென்னை-10 அவர்களின் கணக்கு தலைப்பின் கீழ் செலுத்த வேண்டும்.

ஏதேனும் அல்லது எல்லா டெண்டர்களை யாதொரு காரணமும் காட்டாமல் நிராகரிக்க கீழ் கையொப்பமிட்டவருக்கு பூரண உரிமையுண்டு.

(ஒம்) எஸ். எம். காசிம் செயற் பொறியாளர் பிரிவு-IV கு. மா. வா. சென்னை-10

டிஐபிஆர் 29522/80-48

---

ஆரணி சண்முகம் பேச்சு

## போக்குவரத்து துறையில் முதலிடம் வகிக்கும் தமிழகம்

சென்னை ஜூலை 28. போக்குவரத்து துறையில் தமிழகம் சிறப்பான இடத்தை வகிக்கிறது என்று கழக உறுப்பினர் ஆரணி சண்முகம் கூறினார்.

ஆரணி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் ஏ சி சண்முகம் போக்குவரத்துமான்ய கோரிக்கை விவாதத்தில் பேசும்போது கூறியதாவது:

கருநாடகமாநிலம், ஏன் அகில இந்தியாவிலும் பல மாநிலங்களோடு நமது மாநில போக்குவரத்துக் கழகங்களை ஒப்பிட்டுப்பார்ப்போமானால் தமிழகத்தில் உள்ள போக்குவரத்து கழகங்கள் சிறப்பான முறையில் நடந்து கொண்டிருக்கின்றன.

கிராமப்புற வாசிகள் நகரத்தோடு இணைய வேண்டும் கிராமங்கள் எல்லாம நகரத்தோடு ஒட்டி வாழ வேண்டுமென்ற காரணத்திற்காக புரட்சித்தலைவருடைய அரசுமினி பஸ்களையும் டவுன் பஸ்களையும் கிராமப்புறங்களில் அறிமுகப்படுத்தி சிறப்பான சாதனையை ஏற்படுத்தியிருக்கிறது.

வடாற்காடு மாவட்டம் ராமநாதபுரம் மாவட்டம் ஆகிய இரு மாவட்டங்களில் உள்ள தனியார் பேருந்துகளை தேசிய உடமையாக்க வேண்டும் என்ற கருத்தை சென்ற மாதம் புரட்சித்தலைவர் தெரிவித்திருக்கிறார் அதன் மீது உடனடியாக நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். வடாற்காடு மாவட்டத்தில் குறைந்தது 80 சதவித பேருந்துகள் தனியார் துறையில் இயங்கிக்கொண்டிருக்கின்றன. அவைகளையெல்லாம் தேசியமயமாக்க வேண்டும்.

### அருமையான திட்டம்

ஆந்திராவில் அருமையான ஒரு திட்டத்தை நிறைவேற்றுகிறார்கள். கார்கோ-கம் பாஸஞ்சர் பஸ்ஸை அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். பெரிய நகரத்திலே, காலையிலே மார்க்கெட்டிலேயிருந்து எல்லா பகுதிகளுக்கும் அந்த கார்கோ பஸ்கள் விடப்படுகின்றன. அந்த பஸ்களில் மூட்டைகள் கீரைகள் போன்றவற்றை எடுத்துச் செல்லக்கூடிய வகையிலே வழி வகுத்திருக்கிறார்கள்.

அதை இங்கும் நடைமுறை படுத்த வேண்டுமென்று அரசைக் கேட்டுக் கொள்கிறேன்.

ஆரணி-வேலூர் திருவண்ணாமலை தடத்தில் பல பேருந்துகளை விட வேண்டும் ஆற்காடு, போளூர், செய்யாறு, தேவிகாபுரம் போன்ற பகுதிகளில் இட நெருக்கடி அதிகமாக இருக்கிறது அந்த பகுதிகளில் புதிய தடங்களை அறிமுகப்படுத்த வேண்டும்.

இவ்வாறு ஏ. சி. சண்முகம் கூறினார்.

Published by K. Ravindran on behalf of Thangaman Publications. 275, Avvai Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24. Editor: E. PARASURAMAN.

---

குமரி மாவட்ட

## கழக மாணவர் கூட்டம்

நாகர்கோவில், ஜூலை 28- குமரி மாவட்ட கழக மாணவ செயல்வீரர்கள் கூட்டம் வருகிற ஆகஸ்ட்டு 4ந்தேதி திங்கள் மாலை 4,30 மணிக்கு நாகர்கோவில் பயோனியர் குமாரசாமி பயணியா விடுதியில் நடக்கிறது. அ. தமிழ்மகன் உசேன் கலந்து கொண்டுபேசுகிறார். கழக மாணவர்கள் தவறாது கலந்து கொள்ளும்படி மாவட்ட மாணவர் அமைப்பாளர் அ. செல்வின்குமார் கேட்டுக் கொண்டுள்ளார்.

---

## பேச்சாளர் முகவரி

காஞ்சி ஏ வீரமணி
41. சேஷாத்திரி பாளையம் தெரு,
சின்ன காஞ்சிபுரம்

ஃ ஃ ஃ

ஆணையூர் இஸ்மாயில்
17 அவ்வை நகர்,
திருவான்மியூர்
சென்னை 41

---

வேளாண்மைத் துறை

## பொறியியல் அதிகாரிகள் பணி: காளிமுத்து பாராட்டு

சென்னை, ஜூலை. 28- தமிழக வேளாண்மைத்துறை பொறியியல் அதிகாரிகளின் பணிக்கு அமைச்சர் காளிமுத்து பாராட்டுத் தெரிவித்தார்.

அமைச்சர்கள் காளிமுத்து, குழந்தைவேலுவுக்கு தமிழ்நாடு வேளாண்மை பொறியாளர் சங்கம் பாராட்டு விழா நடத்தியது. விழாவுக்கு சொக்கலிங்கம் தலைமைவகித்தார். விழாவுக்கு வந்து இருந்தவர்களை இப்ராஹிம் வரவேற்றார் அமைச்சர்களைப பாராட்டி வேளாண்மைத் துறை உயர் அதிகாரி ராதாகாந்த், வேளாண்மை இயக்குனர் சுப்ரமணி, சங்கப் பொதுச்செயலாளர் ராமலிங்கம் ஆகியோர் பேசினர்.

வேளாண்மைப் பொறியாளர் பட்டதாரிகள் சங்கம் சார்பாக சங்கத்தலைவர் சங்கர குருராமன் அமைச்சர்களுக்கு மாலை அணிவித்து வாழ்த்தையும் பாராட்டுதலையும் தெரிவித்தார்.

### சொக்கலிங்கம்

விழாத் தலைவர் சொக்கலிங்கம் பேசுகையில் கூறியதாவது:-

திரை அரங்கில் காட்சி நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது மின் தடை ஏற்பட்டு சலனமிடை இடைவெளிக்குப் பின் காட்சி தொடங்குவது போல் இடையில் ஏற்பட்ட அரசியல் புயலுக்குப்பின் ஆட்சி ஏற்பட்டுள்ளது.

வேளாண்மைத் துறையிலிருந்து பொறியியல் துறையை தனித்து பிரித்து கொடுத்ததற்காக முதல்வருக்கும் அமைச்சர்களுக்கு சங்கம்பாராட்டையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறது.

இவ்வாறு சொக்கலிங்கம் கூறினார்.

### சுப்பிரமணி

வேளாண்மை இயக்குனர் சுப்பிரமணி கூறியதாவது:

இப்போதைய ஆட்சியில் கொள்கை விளக்க குறிப்பு வரைவு தயார்க்கும்போது அமைச்சர்கள் உடன் இருந்து பக்கம் பக்கமாக பார்த்து புள்ளி விவரங்களை அவர்களே தருகின்றனர் என்று கூறினார்.

### ராதாகாந்த்

வேளாண்மைத் துறை உயர் அதிகாரி ராதாகாந்த் பேசுகையில், வேளாண்மைத்துறையில் பொறியாளரின் சேவை பாராட்டத்தக்கது. தென்னாற்காடு மாவட்டத்தில் மேடுபள்ளமாக இருந்த ஒன்பதாயிரம் ஏக்கர் நிலத்தை ஏழு மாத காலத்தில் விளை நிலமாக்கியபெருமை இவர்களைச் சாரும் என்று

(4-ம் பக்கம் பார்க்க)

---

## கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்கள் மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள உறுப்பினர் தாள்களையும் உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பாளர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்.

### சேலம் மாவட்டம்

**திருச்செங்கோடு**

திருவேங்கடபுரம் - வி அம்பேத்கார்
ஏரிக்கரடு - வி ஜெயவேலு
கோட்டப்பாளையம் - முத்துக்கவுண்டர்
முதலைமடையூர் - எ வேலப்பன்
வால்ராசபாளையம் - எம் செல்லப்பன்
சொக்கராயன்பேட்டை - எம் சின்னையன்
குப்பாண்டபாளையம் - எஸ் ராமசாமி
ஓடப்பள்ளி - ஆர் பஞ்சநாதஈஸ்வரன்
சமயசங்கிலி - கே கிருஷ்ணன்
வெள்ளைப்பாறை - கே குப்புசாமி
பள்ளிப்பாளையம் - கே அங்கமுத்து
மின்னம்பள்ளி - எம் மருதமுத்து
தலாத்தலாமேடு - மாணிக்கம் (எ) அய்யாவு
எம் மேட்டுப்பாளையம் - ஆர் கணபதிகவுண்டர்
அத்திக்காட்டுக்கொறை - கே ஆறுமுகநாடார்

**சங்ககிரி**

கார்த்திக் கணக்கனூர் - கே. அய்யாங்குட்டி
வெள்ளைநாயக்கன்பாளையம் - இ. இருளப்பன்
சடையாம்பாளையம் - எஸ்.கே. ஆண்டியப்பன்

**திருச்செங்கோடு**

பாப்பாம்பாளையம் - பி.கே. பழனிசாமி
ஓலப்பாளையம் . என்.கே. சண்முகம்
குமராண்டிபாளையம் - கே. முத்துசாமி
காளிப்பட்டி - வி. ஷண்முகம்
பள்ளிப்பட்டி - எ. கந்தசாமி
மொஞ்சானூர் - எஸ். சின்னுசாமி கவுண்டர்
தெற்கு ரதவீதி - எஸ். எம் கிருஷ்ணன்
வெங்கடசபுரி - கே தங்கவேல்

**சங்ககிரி**

ஒண்பாறைகாட்டுவலவு - மு கருணாநிதி
குண்டுமலைக்காடு - எ பெருமாள்
பக்கநாடு - டி மதையன்
முண்டாசியூர் - எம் பழனியப்பன்
கொத்தாபாளையம் - அ அம்மாசி
உதயசூரியனூர் - எஸ் மாரிமுத்து
வெள்ளாண்டி வலசு - எஸ். அப்துல்கார்
வெள்ளாண்டிவலசு - எஸ், ஏ. மணி
இடைப்பாடி - எம். மாயஜோதி
நாச்சிப்பாளையம் - சி. கோவிந்தன்

**திருச்செங்கோடு**

மேட்டுக்கடை - எம். எஸ், வேலப்பா கவுண்டர்
புதூர் தொட்டிபாளையம் - பி. ராமசாமி
பூச்சாங்காடு - எஸ் சுப்பிரமணி
குள்ளநாயக்கன் பாளையம் - கே மாரப்பகவுண்டர்
அரசங்காடு - கே லோகநாதன்
ஆவத்திபாளையம் - கே சுப்பிரமணி
வீரப்பம்பாளையம் - வை பெருமாள்
அப்பநாயக்கன்பாளையம் - பி மாரப்பன்
புள்ளிப்பாளையம் - நகுழந்தைவேலு
புள்ளிப்பாளையம் - ஆர் சுப்ரமணியன்
புள்ளிப்பாளையம் - கே பெருமாள்சாமி
95-அக்ரஹாரம் - டி ராமலிங்கம்
ராகவானந்தநகர் - ஆர் சம்புவன்
கொக்கலை - எஸ் குழந்தைவேலு
எளச்சிபாளையம் - எ குப்புசாமி
குமரவேலிபாளையம் - தனபாலன்
தெற்கு பாளையம் - டி. ஆர் ராமசாமி
கொட்டாம்பட்டி - எம் செங்கோட்டையன்
9 டி. எமர்ஜென்சி கோட்டாஸ் - பி ராஜமாணிக்கம்
ஆலம்பாளையம் - ஆர். சண்முகம்
எஸ் பி பி காலனி - கே அருணாசலம்
புதுப்பாளையம் - கே முத்துசாமி

**சங்ககிரி**

வெள்ளையம்பாளையம்-சி வீரப்பன்
பசுப்பரபட்டி - பி ஆறுமுகம்
மயிலம்பட்டி - எம் எஸ் சிரங்கன்
காடையாம்பட்டி - கே எஸ் கணேசன்
வெள்ளாளபாளையம் - கே எஸ் சீரங்கன்
கண்ணம்புகரட்டூர் - எஸ் இருசாகவுண்டர்
செக்கோளபாளையம் - பி பொன்னுசாமி
ஆபுதூர் கிளை - எம் நல்லமுத்து
பெரியநாச்சியூர் - எ. குப்புசாமி
கெமிகல்ஸ்காலனி - ப. ராஜகோபால்
வேங்கிபாளையம் - வி, சி. ராமசாமி
அய்யங்காட்டூர் - ஆர், நாகப்பன்
சங்ககிரி - ந.மு. சலாவுதீன்

**மேட்டூர்**

வெள்ளாளர் - கே. சுப்பிரமணியம்
கோயில்வெள்ளார் - ந. சுப்பிரமணியம்
மூர்த்திப்பட்டி - எல் கிருஷ்ணன்
காளிகவுண்டனூர் - பி வெங்கடாசலம்
செவலானூர் - எஸ் சி பொன்னையன்
பொட்டனேரி - பி வெங்கடாசலம்
உடையானூர் - மு துரைசாமி
கோனூர் - வி சாந்தப்பன்
பி.6 பி 4, தங்கமாபுரிபட்டனம் - எம் பாலகிருஷ்ணன்
நங்கவல்லி - பி சுந்தரம்
துக்கணம்பட்டி - எஸ் எஸ் இராசன்
எருமைப்பட்டி - இ கே நடராசன்
சென்றாயரெட்டியூர் - எஸ் பி தேவராசன்
காந்திநகர் - கே நடேசன்
காவேரிநகர் - இரா நாகரெத்தினம்
கூனாண்டியூர் - கே சர்க்கரைகவுண்டர்
பொன்னகர் - ஜி பி. சின்னபொன்னன்
சவுரியூர் - ஆர்: முருகேசன்
சின்னசெட்டிபட்டி , ஆர். லோகநாதன்
மடத்தூர் - எம.வி. பொன்னுசாமி
கருணாநிதிநகர் - ப. ராசாமுத்து

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

# அண்ணா



## அமைச்சர் காளிமுத்து பாராட்டு...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

கூறினார்.

### ராமலிங்கம்

சங்கப் பொதுச் செயலாளர் ராமலிங்கம் பேசுகையில் வேளாண்மைத் துறையில் பொறிஇயல் துறையை தனித்துக் கொடுத்தமைக்கு தமிழக அரசைப்பாராட்டுகிறோம். எனத் தெரிவித்தார்.

### குழந்தைவேலு

பாராட்டுக்குநன்றிதெரிவித்து அமைச்சர்குழந்தைவேலு கூறியதாவது: வேளாண்மைத் துறையில் இருந்து பொறி இயல் துறையைத்தனியே பிரித்துக் கொடுக்க நான் 15-2-80 அன்றே கோப்பில் கையெழுத் திட்டேன்.

இடையில் வீசிய அரசியல் புயல் காரணமாக நிறைவேற்றப்படாமல் இருந்தது. தற்போது உங்கள் கோரிக்கை நிறைவேற்றப் பட்டுள்ளது. நீங்கள் நல்லமுறையில் செயல்பட வேண்டும் சென்னை வெள்ளத்தால் பாதிக்கப் பட்டபோது வேளாண்மை பொறியாளர் செய்த சேவை பாராட்டுக்குரியது தென் ஆற்காடு மாவட்டத்திலும் வெள்ளத்தால் பாதிக்கப் பட்ட நிலங்களை விரைவில் விளை நிலமாக மாற்றிய பெருமை வேளாண்மைத் துறை பொறி இயல் வல்லுநர்களையே சாரும்.

இவ்வாறு குழந்தைவேலு கூறினார்.

### காளிமுத்து

அமைச்சர் காளிமுத்து பேசும் போது கூறியதாவது; புதிதாக திருமணம் முடித்து தம்பதிகள் தேனிலவில் மகிழ்ச்சியாக இருப்பது போல் வேளாண்மைத் துறையில் இருந்து பொறி இயல் துறையை தனியே பிரித்து கொடுத்த மகிழ்ச்சியில் இருக்கிறீர்கள். இதற்குவித்திட்டவர் அமைச்சர் குழந்தைவேலு தான். அது செடியாக வளர்ந்துள்ளது அந்தச் செடிக்கு, நான் தண்ணீர் ஊற்றி இருக்கிறேன் இது தழைத்து வளர்வதற்கு பொறிஇயல் வல்லுனர்களாகிய உங்கள் உழைப்பு ஆற்றல் தேவைப்படுகிறது யானையைவாங்கி விட்டீர்கள், அங்குசம் வாங்குவது எளிது.

வேளாண்மைத் துறையை தனித்துபிரித்து விட்டோம் இனி இருக்கும் உங்கள் கோரிக்கையும் விரைவிலே தீர்ந்துவிடும் "போர்க்களத்தின் வெற்றி ஏர்களததிலே நிர்ணயிக்கப்படுகிறது" இந்த உழவு தொழில் சிறந்து விளங்க உங்கள் பணி மிகமிகத் தேவை உழவர் "காடி கஞ்சியும் கார மிளகாயும்" உண்டுவயல்வெளியில் உழைக்கின்றனர் அவர்களுக்கு நன்மை செய்து உதவவேண்டும். இதை மனதில் கொண்டு செயலாற்றுங்கள்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

வேளாண்மைத்துறை பொறியாளர் சங்கப் பொருளாளர் துரைநன்றி கூறினார்.

---





## பிராமண எதிர்ப்பு அரசியல்: கருணாநிதிக்கு ராஜாமுகமது கண்டனம்

சென்னை, ஜூலை. 28- அரசியலில் ஒதுக்கப்பட்டு விட்ட கருணாநிதி பிராமண எதிர்ப்பைக் கையில் எடுத்துக்கொண்டு அலைகிறார் என்று அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

சென்னைத் துறைமுகம் தொகுதி தம்புசெட்டி தெருவில் நடைபெற்ற கழகப் பொதுக் கூட்டத்தில் அமைச்சர் ராஜா முகமது கலந்து கொண்டு பேசினார்.

அமைச்சர் ராஜாமுகமது பேசும் போது கூறியதாவது:-

நடைபெற்று முடிந்த தேர்தலின் முடிவுகள்வேறு விதமாக ஆகி இருந்தால் நம் கதி என்னவாகி இருக்கும்? எத்தனை தோழர்களை நாம் இழந்திருப்போம்?

தேர்தலில்வாக்குப்பதிவு நடைபெறும் நாளுக்கு முந்தைய தினமே வெற்றி நமதே என்று கருணாநிதி போஸ்டர்களை ஒட்டினார்.

ஆர்ப்பாட்ட அரசியல் நடத்தவேண்டாம்அழிந்து விடுவீர்கள் என்று சொன்னோம். கேட்கவில்லை. இம்போது என்ன நிலைமை?

### பிற்போக்கு சிந்தனை

பிற்போக்கு சிந்தனை படைத்திருந்தார்கள் மக்கள் வாக்கு போட்டுதான் நம்மை தேர்ந்தெடுக்கிறார்கள் என்பதை மறந்து விட்டார்கள் அவர்களுக்கு இயற்கையே தண்டனை தந்து விட்டது.

வாய்ப்பு கிடைத்தால் ஆளுங்கட்சியாகிறோம், வாய்ப்பு தவறினால் எதிர் கட்சியாக இருக்கிறோம்.

ஜனநாயக மரபை மதிக்க வேண்டும் என்ற எண்ணம் இருந்ததால்தான் புரட்சித் தலைவர் பொறுமையோடு ஆட்சியை நடத்தினர்.

வாக்குப்போடாத மக்களை எடுத்தேன் கவிழ்த்தேன் என்று திட்டுவது என்ற போக்கில் புரட்சித் தலைவர் இருந்ததில்லை.

ஆட்சியை கலைத்து நம்மை நிராயுதபாணிகளாய் களத்திலேநிறுத்தினார்கள். சகல சக்திகளோடு அவர்கள் களம் இறங்கினார்கள். அரசியல் சட்டவிதிகளை மீறிநின்றார்கள்,

கன்னியாகுமரியிலிருந்து சென்னைவரை அனைத்து மக்களும் ஒட்டுமொத்தமாக முடிவெடுத்து புரட்சித்தலைவரை ஆதரித்திருக்கிறார்கள்

29 ஆயிரம் முஸ்லிம் பெருமக்கள்வாழும்ஆயிரம் விளக்குப் பகுதியில் அருமை அண்ணன் கே ஏ கே வெற்றி பெற்றிருக்கிறார்.

கருணாநிதியின் செயலை மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை அதுதான் இந்த தேர்தலின் அடிப்படையான தீர்வு.

### மோதினார் தோற்றார்

புரட்சித்தலைவா என்ற எழு ஞாயிறு முன்னால் கருணாநிதி மோதிதோற்று விட்டார்.

யாரும் குறை சொல்ல முடியாத அளவுக்கு இந்த ஆண்டுபட்ஜெட்டை டாக்டர் நாவலர் தயாரித்திருக்கிறார்.

அதனால்தான் எதிர்க்கட்சித் தலைவர் எதிர்க்க வேண்டும் என்பதற்காக எதிர்க்கிறேன் என்று சொன்னார்.

ஏழை மக்களின் வாழ்க்கைத்தரம் உயரவேண்டும் என்ற எண்ணத்தில் புரட்சித்தலைவர் இந்த பட்ஜெட்டை அளித்திருக்கிறார்.

வரும் மாநகராட்சிதேர்தலில் திரும்பவும் சென்னை நகரம் யாருக்கு என்ற நிலையை உருவாக்கி விடாதீர்கள்.

ஆட்சிக்கும், மக்களுக்கும் தொண்டு செய்யும் தொண்டுள்ளம் கொண்டவர்களாக தேர்ந்தெடுக்க வேண்டும், ஏழைகளுக்கு தொண்டு செய்யும்இயக்கமாக கழகம் இருக்கிறது.

இன்றைக்கு பிராமண எதிர்ப்பை வைத்துக் கொண்டு ஏதாவது செய்யமுடியுமா என்று பார்க்கிறார் கருணாநிதி.

அனைத்திந்திய அண்ணா திமுகழகம் தான் அண்ணாவுக்கு பிறகு உண்மையான இயக்கம். யாருக்கும் நமது கொள்கையை விட்டுக் கொடுக்க மாட்டோம்,

என்று கருணாநிதி நினைக்கிறார்.

அதிகாரத்திலிருக்கும் போது அதிகாரத்தை சரியாக பயன்படுத்தாவிட்டால் யாரும் மதிக்கமாட்டார்கள்.

அமைச்சர் பதவியில் இல்லாவிட்டாலும் நம்பூதிரிபாட் அவர்களை நாடு மதிக்கிறது என்றால் அவர் அதிகாரத்தி லிருந்தவரை சரியாக நடந்தார்.

அண்ணாவின் தலைமையில் திமுகழகம் மாபெரும் சக்தியாக இருந்தது போல புரட்சித்தலைவரின் தலைமையில் அண்ணா திமுகழகம் மாபெரும் சக்தியாக திகழ்கிறது.

திமுகவிலுள்ள இளைஞர்கள் கழகத்திற்கு வரவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

### சிரிப்பும் எரிச்சலும்

கருணாநிதி ஆட்சியிலிருந்தபோது கேள்வி கேட்கவே அச்சப்பட்டார்கள் இப்போது கேள்வி கேட்டால் புரட்சித்தலைவரை கோபமடையச்செய்யமுடியுமாஎன்று பார்க்கிறார்கள் ஆனால் சிரித்துக்கொண்டே புரட்சித்தலைவர் பதிலளிக்கிறார் கருணாநிதிக்கு எரிச்சலாக இருக்கிறது.

மக்களுக்கு பணிசெய்ய வேண்டும் என்ற எண்ணம் இருந்தால் எங்கே இருந்தால்என்ன? எதிர்க்கட்சித் தலைவராகஇருந்தால் மக்களுக்கு பணியாற்ற முடியாதா? அதிகாரத்தில் இருந்தால்தான் மக்கள் நம்மை மதிப்பார்கள்

### மன்றத் தோழர் மறைவு

சென்னை, ஜூலை. 28- மயிலை பிள்ளையார் கோயில் தோட்டம் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். பொதுநல மன்றம் உறுப்பினர் எம்.ஆர் மோகன்ராஜ் நேற்று (27ந்தேதி) மாலை நாலு மணிக்கு மறைவு எய்தினார் இன்று மாலை இறுதி ஊர்வலம் நடக்கிறது. குடிசை மாற்று வாரியத் தலைவர் டி கே கபாலி எம் எல் ஏ. மயிலை வே தமிழ்மணி, மந்தைவெளி நடராசன், எஸ் ராதாபாய் மற்றும் கழக மன்றசெயல்வீராகள் கலந்து கொள்கின்றனர்.

### வி. எஸ். ராகவன் நாடகக்குழு வெள்ளிவிழா: முதல்வர் பங்கேற்பு

சென்னை, ஜூலை 28- நடிகர் வி எஸ் ராகவனின் ஐ என் ஏ தியேட்டர்சாரின் 25 வருடகால நாடக உலக சேவையைப் பாராட்டி நடக்கும் விழாவில் முதல்வர் புரட்சித் தலைவா கலந்துகொண்டு பாராட்டிப் பேசுகிறார்.

இந்த விழா வருகிற 2-8 80 சனிக்கிழமை மாலை 6மணிக்கு சென்னை, மியூசிக் அகடாமி ஹாலில் நடக்கிறது.

அமைச்சர் செ. அரங்கநாயகம் வெள்ளி விழா மலரை வெளியிடுகிறார். முதல் பிரதியை டி. வி. நாராயணசாமி பெற்றுக் கொள்கிறார்.

கவிஞர் கண்ணதாசன், டாக்டர் பானுமதி ராமகிருஷ்ணன், டி.ராமனுஜம் எஸ் வி சகஸ்ரநாமம், சோ, ஆர் கிருஷ்ணசாமி, டி எஸ் கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பாராட்டி பேசுகிறார்கள்.

விழாவில் 'தாமயுத்தம்' என்ற நாடகம் நடைபெறுகிறது.

விழாக்குழுத்தலைவர் கே முருகேசன், செயலாளர்கள் சுந்தரவரதன், கே சீனிவாசன் ஆகியோர் விழா ஏற்பாடுகளைச் சிறப்பாக செய்துவருகின்றனர்.

## ஆமை கருணாநிதி திருநடனம்: புலவர் அறிவுடைநம்பி வர்ணனை

சென்னை, ஜூலை28- அடங்காமை ஆர் இருள் உய்த்துவிடும் என்றார் வள்ளுவர் அதுபோல கருணாநிதி இன்று ஆமையானார். அடங்காமமை ஆனார் என்று புலவர் அறிவுடைநம்பி கூறினார்.

வில்லிவாக்கம் தொகுதி திருமங்கலத்தில் கழகப் பொதுக்கூட்டம் நடந்தது குடிசை மாற்று வாரியத் தலைவர் டி.கே. கபாலி, பிரயாகரன் எம். எல். ஏ. ஆகியோரைப் பாராட்டிப் பேசினார்.

மேலும் அறிவுடைநம்பி கூறியதாவது:-

"ஆமையைச் சமைத்து உண்பார்கள் சிலர்: அடுப்பில் உலை நீரில் ஆமையைப் போடுவார்கள். உலைநீரில் மரத்துக் கிடக்கும் ஆமை வெது வெதுப்பு வந்ததும் ஆனந்த நடனம் ஆடும்.

அதன் பின்பு ஆமை சூடு ஏற, ஏறத் துடிக்கும்? இந்த ஆமைப் போல் அடங்கா ஆமை ஆனார் கருணாநிதி.

அடுப்பும், உலைப்பானையுமாக காங்கிரஸ் தி மு க. கூட்டணி அமைந்தது. 48 இடங்களைப் பெற்று மரத்துக் கிடந்த தி மு க. தலைவர் இந்த சட்டமன்றத் தேர்தலில் 38 இடங்களைப் பெற்று சுடுநீரில் ஆமைபோல் துடிக்கிறார் இப்போது 38 இடங்கள் 36 ஆகிவிட்டன.

அண்ணாவின் கொள்கையை விட்டு தன்னாட்சிதத்துவம் இழந்து - மொழிக் கொள்கையில் தடுமாறி, 109 இடங்களானாலும் முதல்வர் பதவி கிடைத்தால் சரி என்ற நிலைக்கு அடக்கம் கடந்து ஆமை ஆன தலைவர் கருணாநிதி.

இவ்வாறு புலவர் அறிவுடைநம்பி கூறினார்.

திருப்பத்தூர் ராமமூர்த்தி, மதுசூதனன், கண்ணன் ஆகியோரும் பேசினர்,